உ

திருச்சிற்றம்பலம்




# அத்வைத விளக்கம்.



வெளியிட்டோர் :
திருவாலவாய்ச் சைவ சித்தாந்த சபை
மதுரை

[ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் குருபூசை
இலவச வெளியீடு]



கிடைக்குமிடம்
சித்தாந்தவித்தகர் தி. சு. கோவிந்தசுவாமி
செயலாளர்
திருவாலவாய்ச் சைவ சித்தாந்த சபை
29, 2வது தெரு.
ஜெய்ஹிந்துபுரம், மதுரை-11.

1—7—87

உ

சிவமயம்

## பாதகங்கள் தீர்க்கும் பராபரன் துதி

''வேதநாயகனே போற்றி! விண்ணவர் தலைவா போற்றி;
மாதொருபாகா போற்றி! மறுசமயங்கண் மாளப்
பேதகஞ் செய்வாய் போற்றி! பிஞ்ஞகா போற்றி! யான் செய்
பாதகமனைத்துந் தீர்க்கும் பராபரா போற்றி! போற்றி!''

ஃ ஃ ஃ

# சைவ சமயத்தினர்க்கு வேண்டுகோள்:-

அன்புடையீர்!

வெளிநாட்டாரால் சூட்டப்பெற்று சில நூற்றாண்டுகட்குப்பின் வழக்கில் வந்துள்ள **இந்து மதம்** என்ற சொல் சைவ சமயத்தை மட்டும் குறிக்காது.

வைணவம், சுமார்த்தம், மத்வம், சில நவீன மதங்கள் ஆகியவை இச்சொல்லுக்குள் நுழைந்துள்ளன.

மேற்கூறிய மதங்களைச் சேர்ந்த அனைவரும் சமுதாய ரீதியில் ''இந்துக்கள்'' என்று ஒற்றுமையாக வாழ்வது சரியேயாகும். இந்து மதத்திற்கு என வழிகாட்டிகள் பலர் தோன்றி, நமது நாட்டின் புராதனச் சமயமான சைவ சமயம் இன்னது எனத் தெரியாதவாறு பல வகைப் பிரசாரங்களால் குழப்புகின்றனர்.

இந்துமதப் பிரசாரத்தில் சைவ சமயம் இன்னதெனப் புலப் படுத்துவதில்லை.

இந்துமதம் என்ற சொல் சிவன் கோயில்களில் மட்டும் மதக் கலப்படத்தையும், ஆக்கிரமிப்பையும் உண்டுபண்ணுகிறது.

சைவ சமய மக்களே!

நீங்கள் சைவ சமய நூல்கள், பத்திரிகைகள், சைவப் பிரசங்கங்கள் ஆகியவைகளைக் கற்றும், கேட்டும் சைவ சமயத்தை முறையாகக் கடைப்பிடிப்பதும், சிவன் கோயில்களில் ''இந்து மதம்'' என்ற போர்வையில் மதக்கலப்படப் பிரசாரமும், ஊடுருவலும் உண்டாகாதவாறு தடுத்துப் பாதுகாப்பதும் உங்களின் கடமையாகும். சிந்திப்பீர்!

''சாதனையின்றிச் சிந்தனையாற் பிரயோசனமில்லை''.

சிந்திப்போம்! செயல்படுவோம்!

தினசரிப் பிரார்த்தனை

வான்முகில் வழாது பெய்க! மலிவளஞ் சுரக்க! மன்னன்
கோன்முறை அரசு செய்க! குறைவிலாதுயிர்கள் வாழ்க!
நான்மறை அறங்கள் ஓங்க! நற்றவம் வேள்வி மல்க!
மேன்மைகொள் சைவநீதி விளங்குக உலகமெல்லாம்!

1-7-87 மதுரை. } திருவாலவாய்ச் சைவ சித்தாந்த சபை, மதுரை.

---

''சைவமுந் தமிழும் தழைத்தினி தோங்குக!''

---

உ

சிவமயம்

அத்வைத விளக்கம்

20-5

[இக்கட்டுரை சென்னை சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் பொன் விழா மலரிலிருந்து (1955) எடுத்து நன்றியுடன் வெளியிடப்படுகிறது.] (பக்கம் 90—98)

# "அவையே தானே ஆதல்"

வித்துவான் மு அருணாசலம் பிள்ளை

தமிழ் விரிவுரையாளர். அண்ணாமலைப் பல்கலைக் கழகம்

"இத்தொடர் சிவஞான போதம் இரண்டாம் சூத்திரத்து முதல் அதிகரணத் தொடராகும். இது, உலகிற்கு நிமித்த காரணனாகிய முதல்வன், தன்பால் ஒடுங்கிய உலகத்தை உயிர்களின் பொருட்டு மீளத் தோற்றுவிக்குங்கால் அவ்வுயிர்களோடு ஒன்றாய் நிற்பனோ வேறாய் நிற்பனோ உடனாய் நிற்பனோ என்ற ஐயப்பாட்டின்கண், ஒன்றாயும் வேறாயும் உடனாயும் நிற்பன் என்பதை வலியுறுத்தற்கு எழுந்ததாகும். இக்கருத்திற்கேற்ப இச்சூத்திரத் தொடரிலுள்ள 'ஆதல்' என்பதனை அவையே என்பதனோடும் இயைத்து. அவையே யாதல் தானே யாதல் என இரண்டு கூறாகவும், இரட்டுற மொழிதல் என்னும் நூற்புணர்ப்பால் மீட்டும் இத்தொடரை ஆற்றொழுக்காக அவையே தானே யாதல் என ஒன்றாகவும் வைத்துப் பொருள் கொள்ளல் வேண்டும். இங்ஙனங் கொள்ளுங்கால் இத்தொடர் அவையேயாதல், தானே யாதல், அவையே தானே யாதல் என மூன்று வகைப்படுவதாகும்.

இவற்றுள் அவையேயாதல் என்பது, சங்கார காரணனாகிய முதல்வன், கலப்பினால் உடலின் உயிர்போல அவ்வுயிர்களேயாகி நிற்றலாகும், அஃதாவது, உடல் அழியாதிருத்தற்கு உயிர் அதனோடு கலந்து உடல் வேறு தான் வேறு என்னும் வேறுபாடின்றி அவ்வுடலே யாய் நிற்றல் போல. உயிர்கள் நிலைபெறுதற்கு முதல்வன் அவற்றோடு கலந்து உயிர்கள் வேறு தான் வேறு என்னும் வேறுபாடின்றி அவ்வுயிர்களேயாய் நிற்றல் என்பதாம். இஃது ஒன்றாய் நிற்றல் எனவும், அபேதம் எனவுங் கூறப்படும்.

தானேயாதல் என்பது, கண்ணின் ஞாயிறுபோலப் பொருட்டன்மையால் அவ்வுயிர்களின் வேறாதலாகும். அஃதாவது, கண் உலகப் பொருளைக் காணுதற்கு ஞாயிற்றின் ஒளி துணையாதல் வேண்டும். அதன் துணையில்லையேல் கண் ஒன்றனையுங் காண மாட்டாது. கண் காணுதற்கு ஞாயிறு துணையாய் நிற்பினும் ஞாயிறு வேறு கண் வேறே யாம். அதுபோல, உயிர்கள் அறிதற்கு முதல்வன் துணையாய் நின்று அறிவித்தல் வேண்டும். அவன் அறிவித்தாலன்றி உயிர்கள் தாமாக

ஒன்றனையும் அறியமாட்டா. உயிர்கள் அறிதற்கு முதல்வன் துணையாய் நின்று அறிவித்தாலும் பொருட்டன்மையால் முதல்வன் அவ்வுயிர்களின் வேறே யாவன் என்பதாம். இது வேருய் நிற்றலெனவும் பேதமெனவுங் கூறப்படும்.

அவையே தானேயாதல் என்பது, உயிர்க்குயிராதல் தன்மையால் கண்ணெளியின் உயிரறிவு போல உடனுய் நிற்றலாகும் அஃதாவது, உடலின்கண் உயிர்கலந்து நிற்றலால் உண்டாய அறிவும், ஞாயிற்றின் துணைபெற்ற கண்ணொளியுஞ் சேர்ந்து ஒரு பொருளைக் காணும்போது, உயிரறிவானது கண்ணொளி வேறு, தான் வேறு என்னும் வேறுபாடின்றிக் கண்ணொளியோடு கூடி அப்பொருளிற் செல்லுமாறு போல. உயிர்கள் இன்பத் துன்பங்களை நுகர்வதற்கு முதல்வன் அவ்வுயிர்களுடன்கூடி, உயிர்கள் வேறு தான் வேறு என்னும் வேறுபாடின்றி உயிர்க்குயிராய் நின்று, அவ்வின்பத் துன்பங்களுக்குக் காரணமான விடயங்களில் உடன் செல்லுதலாகும். இஃது உடனுய் நிற்றலெனவும் பேதா பேதமெனவுங் கூறப்படும். இம்மூன்று நிலைகளும் முதல்வனுக்கும் உயிர்களுக்குமுள்ள அத்துவித நிலையை உணர்த்துவனவாம்.

வேதமானது "பிரமம்அத்து விதம்" எனக் கூறுகின்றது அத்துவிதம் என்பதற்கு இரண்டில்லை யென்பதே பொருளாதலின் பிரமப் பொருளைத் தவிர இரண்டாவது பொருளில்லை யென்று கொள்ளுதல் வேண்டும். அவ்வாறன்றி முதல்வன் வேறு உயிர்கள் வேறு என இரண்டு பொருள்கள் உள்ளன வென்பதும், முதல்வன் அவ்வுயிர்களோடு ஒன்ருயும் வேருயும் உடனுயும் நிற்பன் என்பதும் பொருந்துவன ஆகாவெனின், அத்துவிதம் என்னும் சொல்லுக்கு பொருள் கொள்ளுதலிற் கருத்து வேறுபாடு உண்டு. அச்சொல்லின் உண்மைப் பொருள் இன்னதென அறிந்து கொண்டால் இத்தடை யெழுதற்கு இடன் இல்லையாகும் ஆதலின் அச்சொற்குப் பிறர் கூறும் பொருளும், அப்பொருளை விளக்குதற்கு அவர்கள் எடுத்தாண்டுள்ள உவமைகளும் பொருந்தாமைக் காட்டி அப்பால் அதன் உண்மைப்பொருள் காண்போம்.

அத்துவிதம் என்னும் வடசொல், ந-துவிதம் என்னும் இரண்டு டன் புணர்ப்பால் ஆயது. இவற்றுள் முன்னின்ற நகர வுயிர்மெய் தன் முன் உயிர் முதல் மொழி வந்தால், ந்- அ என பிரிந்து அந் என மாறி, வருமொழி முதலிலுள்ள உயிரேற இடங்கொடுத்து நிற்கும் எடுத்துக் காட்டாக அநகன் என்ற சொல்லைக் கொள்ளலாம். இச்சொல், ந - அகன்; ந - அ, அகன்; அந் - அகன்; அநகன் என்ருயது. அநங்கன், அநுசிதம் முதலான சொற்களும் இவ்வாறு புணர்ந்தனவேயாம். இனி மெய்ம் முதல் மொழி வந்தால் நகர மெய் கெட்டு அகரம் மாத்திரமாய் நின்று. ந-களங்கன், அகளங்கன். அ-பயன். அபயன் எனப்புணர்ந்து நிற்கும். ஈண்டு வருமொழியாகிய

துவிதம் என்பது மெய்ம் முதல்மொழி யாதலின் ந - துவிதம் என்னும் இரண்டும் சேர்ந்து அத்துவிதம் என்றாயிற்று இந் நகரம், இன்மை அன்மை மறுதலையாகிய பல பொருளுணர்த்தும். அவற்றுள் இன்மை பொருள்பற்றி இரண்டு இல்லை யெனக்கொண்டு, பிரமப் பொருளைத் தவிர வேறு பொருளில்லை: பொன்னும் பணியும் போல முதல்வனும் உயிரும் அபேதமே யென்பர் கேவலாத்துவிதிகள் என்னும் ஏகான்மவாதிகள் ★

இனி, அத்துவிதம் என்னும் அச்சொல்லுக்கு அநீதி, அதன்மம் என்றாற்போல மறுதலைப் பொருள்கொண்டு முதல்வனும் உயிர்களும் இருளும் வெளியும் போலப் பேதமே யென்பர் துவைத வாதிகள் என்னும் மாத்துவர் அநீதி யென்பது நீதியின் மறுதலை, நீதி யென்பது ஒன்று இருந்தாலன்றி அநீதியென்ப தொன்று இல்லையாய் முடியும் எனவே மறுதலைப் பொருள் கொள்ளுங்கால் நீதியும் உண்டு. அநீதியும் உண்டு என்பது பெறப்படும் அதன்மம் என்பதும் இத் தன்மையதே இவ்வாறே அத்துவிதம் என்ற சொல்லுக்கு மறுதலைப் பொருள்கொண்டு, துவிதமும் உண்டு அதன் மறுதலையாகிய ஏகமும் உண்டு: அஃதாவது உயிர்களும் உண்டு முதல்வனும் உண்டு. இரண்டும் இருளும் வெளியும் போலப் பேதமே யென்பது இவர்கள் கருத்து.

விசிட்டாத்துவிதிகள் என்னும் வைணவர்களும் ஏகான்மவாதிகளைப் போலவே அத்துவிதம் என்பதற்கு இரண்டில்லை யென இன்மைப்பொருளே கொண்டு, கடவுள் ஒன்றே ; இரண்டில்லை யெனவும்' ஆனால், உயிரும் உலகமும் உண்டு; அவை பல; அவையெல்லாம் அக் கடவுளின்பால் அடங்கி நிற்கும்; எனவுங் கூறுவர் இவர்கள் கடவுளின் வேறாக உயிரும் உலகமும் உண்டு என்றதனாற் பேதமும், அவை கடவுளின்பால் அடங்கி நிற்கும் தனித்து நில்லா என்றதனால் அபேதமுங்கொண்டு இப்போதா பேதக் கொள்கைக்குச் சொல்லும். பொருளும் உவமையா மென்பர்.

இம்முத்திறத்தார் கொள்கைகளையும் அவர்கள் காட்டும் உவமை வாயிலாக நோக்குவாம்.

## அபேதவாதமும் பொற்பணியுவமையும்

பொன் என்னுஞ் சொல் குறிக்கும் சொல் வேறு. பணி (அணிகலம்) யென்னுஞ் சொல் குறிக்கும் பொருள் வேறு அது போலப் பிரமம் என்னுஞ் சொல் குறிக்கும் பொருள் வேறு உயிர் என்னும் சொல் குறிக்கும் பொருள் வேறு. ஆயினும்; பொன்னையின்றிப் பணிகள் என வேறில்லாமைப் போலப் பிரமப் பொருளையின்றி உயிர்களென வேறில்லை. பொன் ஒன்றே பல அணிகளாயினாற் போலப் பிரமப் பொருளொன்றே பலவுயிர்களாயின. ஆதலின் இரண்டும் ஒன்றேயென்பது ஏகான்மவாதிகள் கொண்ட முடிபா

★ ஏகான்மவாதம் — சங்கரரது கொள்கை.

கும். இம்முடிவு பொருந்தாது. எவ்வாறெனில், பொன் தானே பணியாதல் இல்லை; பிறன் ஒருவனாற் பலவாறு சிதைத்துப் பல்வேறு பணிகளாக்கப்படுகின்றது. இவ்வுவமை கொள்ளின் பிரமமப் பொருளின் முழுமுதற்றன்மைக்கு இழுக்காகும். மேலும், பொன்னின் நிறம் குணம் முதலிய தன்மைகளெல்லாம் பணிகளிற் காணப்படுதல் போன்று பிரமப் பொருளுக்கு உரிய முற்றுமுணர்தல் வரம்பில் ஆற்றல் தன்வயம் உடைமை முதலான பண்புகளெல்லாம் உயிர்களின் கட்காணப்பெறுதலும் வேண்டும். வினைக்கீடாகப் பிறந்தும் இறந்தும் இன்பத்துன்பங்களை நுகர்ந்து உழலும் உயிர்களின்பால் முற்றுமுணர்தல் முதலான குணநலங்கள் இல்லையென்பதை நாளுங் கண்கூடாக் காண்கின்றோம். இவ்வாறாகவும், உண்மை அறிவு இன்ப வடிவாக விளங்கும் பிரமப் பொருளை ஆணவ முதலிய அழுக்குக்களோடு கூடிய உயிர்களாகக் கூறுதல் கழுவாயில்லாததோர் வழுவுமாகும் ஆதலின் முதல்வனும் உயிர்களும் அபேதமேயென்றலும். அதற்கு பொற்பணியுவமை கூறுதலும் பொருந்தாவாம.

## பேதவாதமும் இருள் வெளியுவமையும்

(ஈண்டு வெளியென்றது ஒளியைக் குறிப்பதாகும்)

இருளும் வெளியும் போல முதல்வனும் உயிர்களும் பேதமேயென்ற துணிபுடையவர்கள் துவைதவாதிகள், இவர்கள் கூறும் இருள் வெளியுவமையால் முதல்வன் வேறு - உயிர்கள் வேறு என்பது பெறப்படுமாயினும் உவமையின் இயல்புகளோடு முதல்வனுக்கும் உயிர்களுக்கும் உள்ள இயல்புகள முற்றும் மாறுபடுவனவாம். எவ்வாறெனில், இருள் உள்ளவிடத்து ஒளியும் ஒளியுள்ளவிடத்து இருளும ஒருபோதும் இருத்தல் இல்லை. இவ்விரண்டும் ஒனறற்கொன்று பகைப் பொருள்களாகும். மேலும் ஒளியால் இருள் மாய்ந்துபோம். இவை உவமத்தின் இயல்புகள் இதுபோல முதல்வன் உள்ளவிடத்து உயிர்கள் இல்லையென்றுதல் உயிர்கள் உள்ளவிடத்து முதல்வன் இல்லையென்றுதல் கூறுவது பொருந்தாது. இவ்விரண்டும் நட்புடையன. முதல்வன் அருள் பெற்றுப் பேரின்பப் பெருவாழ்வு வாழ வேண்டுவது உயிர். ஆதலால் முதல்வனும் உயிர்களும் இருளும் வெளியும் போலப் பேதமேயென்றலும் பொருத்த முடையதன்று.

## பேதாபேதவாதமும் சொற்பொருளுவமையும்

முதல்வனுக்கும் உயிர்களுக்கும் உள்ள தொடர்பு பேதாபேதமேயென்றும், அதற்குச் சொல்லும் பொருளும் உவமையா மென்றுங் கூறுவர் விசிட்டாத்துவிதிகள். சொல்லும் பொருளும் வேறாயிருப்பினும் ஒரு சொல்லைக் கூறும்போது அதன் பொருளும் உடன் தோன்

றுதல் போல, முதல்வனும் உயிரும் வேருயினும் முதல்வனைக் கூறும் போது அவனது நிறைவின்கண் அடங்கியுள்ள உயிர்களும் உடன் தோன்றும் என்பது இவர்கள் கருத்து. இக்கருத்தும் பொருத்த முடையதன்று எவ்வாறெனில், சொல் இருக்குமிடம் வேறு. பொரு ளிருக்கும் இடம் வேறு. அஃதாவது, தாமரை யென்ற சொல் இருக்கு மிடம் வாய். அச்சொல்லாற் குறிக்கப்பெறும் பொருள் இருக்குமிடம் ஒரு நீர் நிலை இவ்வுவமை வேருயிருத்தற்குப் பொருந்துமன்றி ஒன் ருயும் இருத்தற்குப் பொருந்தாது. இவ்வுவமையைக் கொள்வதாயின் முதல்வன் இருக்குமிடம் வேறு, உயிர்கள் இருக்குமிடம் வேறு எனக் கொள்ளுதல் வேண்டும். கொண்டால் முதல்வனையின்றியும் உயிர்கள் தனித்திருக்குமென்பது பெறப்பட்டு முதல்வனது முழு நிறைவுக்கு இழுக்காய் முடியும், முதல்வன்பால் உயிர்கள் அடங்கி நிற்பன ஆதலின் வேறுதல் இல்லை; அபேதமே யெனின், அங்ஙனம் அபேதங்கொள்ளின், அவ்வுயிர்கள் எய்தும் இன்பத்துன்ப நுகர்ச்சி முதலியவெல்லாம் முதல்வனுக்கும் உண்டு என்னல்வேண்டும். எனவே முதல்வனுக்கும் உயிருக்கும் உள்ள தொடர்பு பேதாபேதமே யென்ற லும், அதற்குச் சொற்பொருளுவமை கூறுதலும் பொருந்தாவாம்.

இங்ஙனம் முதல்வனுக்கும் உயிர்களுக்கும் உள்ள தொடர்பு பற்றி ஒவ்வொன்றே கூறும் பிறசமயக் கோட்பாடுகள் குறைபா டுடையனவாதல் கண்டு அவற்றை விடுத்து, அத்துவிதம் என்னும் சொல்லுக்கு இரண்டு அன்று என அன்மைப் பொருள் கொண்டனர்சுத்தாத்துவித சித்தாந்த சைவர்கள். முதல்வனும் உயிர் களும் பொருட்டன்மையால் வேறு வேருயினும், கலப்பினுல் ஒன்றே யாம் இரண்டு பொருள் கலப்பினுல் ஒன்றுபட்டிருந்தலைக் குறிப் பதற்கே வேதம் அத்வைதம் எனக் கூறிற்று அவ்வாறன்றிப் பொருள் ஒன்ருகவேயிருப்பின், இன்மை முதலிய பல பொருள் தந்து ஐயம் விளைவிப்பதாய அத்வைதம்என்னும்சொல்லாற் கூருமல்''பிரமம் ஏகம்'' எனத் தெளிவுபடக் கூறியிருக்கும். அன்றியும் முதற்பொருள் ஒன்றேயுள்ளதாயின் அது தன்னைத்தானே அத்துவிதம் (ஒன்று) எனக்கூறிக்கொள்ளுதல் பயனில் கூற்ரும். பிறர்க்குப் பயன்படவே கூறிற்று எனின், அப்பயன் அடையும் உயிர் வேறு இருத்தல் வேண் டும். மேலும் எண்ணுப் பெயர் மேல் வந்த நகரம், ந-ஏகம். அநேகம் ஒன்று அல்ல என அன்மைப் பொருளுணர்த்திப் பொதுமையில் நிற்பதன்றி, அப்பிரகாசம் அநீதியெனப் பிற பெயர்கள் மேல்வந்த நகரம் போல இன்மை மறுதலையாகிய பொருள் உணர்த்துதல் வழக் கின்கண் இல்லை. ஆதலால், துவிதம் என்ற எண்ணுப் பெயர் மேல் வந்த நகரம், இரண்டு அன்று என அன்மைப் பொருளே உணர்த்து மென்பது சித்தாந்த சைவர்கள்கொண்ட முடிபாகும். இம்முடிபிற் கேற்ப ஒன்றுதல் வேறுதல் உடனுதல் ஆகிய மூன்று இயல்புகளையும் இவர்கள் காட்டும் திருட்டாந்தங்களின் வாயிலாக இனிக் காண்போம்.

## ஒன்ருய் நிற்றல்

முதல்வன் உயிர்களோடு ஒன்ருய் நிற்றல், உடலின்கண் உயிர் போல்வதாகும் என்பது மேலே கூறப்பட்டது. அவ்வுண்மையின் பொருத்தத்தை மீண்டும் நோக்குவாம். உயிரானது எழுவகைத் தாதுக்களாற் கட்டப்பட்ட உடம்பினையும், ஐம்பொறி முதலிய கருவிகளையும் பற்றி நிற்கும். அங்ஙனம் நிற்கும்போது அவ்வுயிரோடு கூடிய உடம்பிற்குச் சாத்தன் கொற்றன் முதலிய பெயர்களுள் ஒன்று இடப் படும். அப்பெயர் உடம்பிற்கு இடப்பட்டதேயன்றி உயிருக்கு இடப் பட்டதன்று. உடம்பிற்கிட்ட அப்பெயரால் சாத்தா எனப் பிறனொருவன் அழைத்தவழி அவ்வுயிர் என்ன ? என்று கேட்கிறது. அதற்குக் காரணம் உயிர், தான் வேறு உடல் வேறு என்னும் வேறுபாடின்றி அவ்வுடலோடு கலந்து நிற்றலேயாகும்; பிறிதில்லை. அவ்வாறு கலந்து நிற்பினும் உயிர் உயிரே; உடம்பு உடம்பேயாகும். அஃதாவது உயிர் அறிவுடைப் பொருளே. உடம்பு அறிவில் பொருளே என்பதாகும். உயிர் உடம்பாகமாட்டாது. உடம்பு உயிராகமாட்டாது. எனினும், உயிர், உடலை நான் என்பதனுல் உடம்பாயும், என்னுடல் என்பதனுல் உடம்பின் வேருகவும் நிற்கும். உடம்பு உயிராகவும் நில்லாது. அதனைப் பிரிந்து வேருகவும் நில்லாது. அதுபோல, முதல்வன் உயிர்களுடன் கலந்து நிற்பன் ஆயினும் முதல்வன் முதல்வனே முற்றுணர்வுடையவனே); உயிர் உயிரே (சிற்றறிவுடையதே). முதல்வன் உயிராகமாட்டான். உயிர் முதல்வனுகமாட்டாது. எனினும், முதல்வன் உயிர் நிலைத்தற்காக அதனுடன் கலந்து நிற்றலால் உயிராயும், உயிருக்கு அறிவித்தலால் அதனினும் வேருயும் நிற்பன். உயிர் முதல்வனுகவும் நில்லாது அவனின் வேருகத் தனித்தும்நில்லாது, இவ்வியைபுகளால் உடலின் உயிர் என்ற உவமை நன்கு பொருந்துமாறு காணலாம் இஃது ஒன்ருய் நிற்பினும் ஒன்ருதல் இல்லையென்பதையும் புலப்படுத்து நிற்றல் உணரத்தக்கது

## வேருய் நிற்றல்

வேதம், அத்துவிதம் என்றதுமன்றிப் 'பிரமம் ஏகம்' எனவும் ஓதுதலால் அதற்குமாருக உயிர்கள் வேறு உண்டெனக் கொள்ளுதலும், அவ்வுயிர்களோடு முதல்வன் ஒட்டி ஒன்ருய் நிற்பன் எனக் கூறுதலும் பொருந்தாவெனின், ஏகம் என்ற சொல்லுக்குப் பொருள் ஒன்று என்பதே, பிரமம் ஏகம் என்றதன் கருத்துப் பதிப்பொருள் ஒன்றே; இரண்டில்லையென்பதேயாம். இக்கருத்துணராது பதிப் பொருள் ஒன்றேயுள்ளது. உயிர் முதலிய பொருள் வேறென்றுமில்லையென்று கூறுதல் பொருந்துவதன்று. மேலும், பதிப்பொருள் ஒன்றேயென்று கூறுகின்றவன் ஒருவன் உளன். அவன் அப்பதிப் பொருளின் வேருகிய பசு எனப்படுவன் என்று அறிதல் வேண்டும்.

பதியும் அறிவுடைப் பொருள். அதனை அறிகின்றவனும் அறிவுடைப் பொருளே. அவனைப் பசு என்றல் பொருந்தாது எனின், அவன் பாசத்தோடு கூடி நிற்றலாற் பசு எனப்பட்டனன் என்பதாம். இவ்வாறு வேற்றுமைகூறுதல். பிரம்மம் இல்லையாயின் வேறொரு பொருளுமில்லையென்னும் மறைமொழியோடு மாறுபடுமேயெனின் மாறுபடாது. அகரஉயிரும் அதனையொழிந்த எழுத்துக்களும் வெவ்வேறாகவுள்ளன. அகரம் முயற்சி விகாரத்தானன்றி வாயைத் திறந்த அளவில் இயல்பாகிய நாத மாத்திரையானே பிறப்பது. பிற எழுத்துக்களெல்லாம் வேறு வேறான முயற்சி விகாரங்களாற் பிறப்பன ஆயினும் வாயைத் திறவாதபோது இவ்வெழுத்துக்கள் நம் செவிப்புலனுக்குக் கேட்குமாறு எழுத்தொலிகளாக தோன்றுதல் இல்லை. வாயைத் திறந்து உச்சரித்த பின்பே தத்தமக்கு உரிய முயற்சி வேறுபாட்டால் எழுத்தொலிகளாய்த் தோன்றுகின்றன. இதனால் வாயைத் திறந்த அளவில் தோன்றும் அகரவொலி பிற எழுத்தொலிகளோடு கலந்திருக்கின்றதெனக்கொண்டு, அகரவுயிர் இல்லையாயின் அக்கரங்களில்லை எனக் கூறுவர். அதுபோல, எங்கும் நிறைந்துள்ள பதிப்பொருளின் நிறைவுக்குள் உயிர்கள் அடங்கி நிற்றலைக் கொண்டு பதிப்பொருள் இல்லையாயின் ஒரு பொருளும் இல்லையென வேதங் கூறிற்று. அவ்வளவேயன்றி இரண்டாவதாக ஒரு பொருளும் இல்லையென்றல் அதன் கருத்தன்று. இதனால் பதிப்பொருளின் வேறாக உயிர்கள் உண்டென்றும், அவ்வுயிர்களோடு பதிப்பொருள் ஒன்றாய் நிற்றலேயன்றிப் பொருட்டன்மையால் வேறாய் நிற்றலும் உண்டெனக் கொள்ளுதலும் பொருந்தும் என்க. முதல்வனும் உயிரும் வேறாதலையுணர்த்தும் இவ்வுவமை வேறு அன்றாதலையும் உணர்த்தி நிற்றல் நினைவிற் கொள்ளத்தக்கதாம்.

## உடனாய் நிற்றல்

வேதம், பிரமப்பொருளை ஏகமென்றும், அத்துவிதமென்றும் கூறுகின்றது அவற்றுள் ஏகம் என்பதற்குப் பிரமப் பொருள் ஒன்றேயென்று பொருள் கொண்டால் அத்துவிதம் என்பதற்கும் இரண்டில்லை ஒன்றே என்று பொருள் கொள்ளுதலே பொருத்தமாகும். அவ்வாறன்றி, ஏகம் என்பதற்கு ஒன்றென்றும் அத்துவிதம் என்பதற்கு இரு பொருளின் கலப்பென்றும் பொருள் கொள்ளுதல் வேதத்தொடு முரணுமெனின், முரணாது. எவ்வாறெனின் பண்ணும் அதனோடு பிரிப்பின்றி நிற்கும் ஓசை போலவும் பழமும் அதனோடு பிரிப்பின்றி நிற்கும் சுவை போலவும் எங்கும் நிறைந்துள்ள முதல்வன் திருவருள் உயிர்களோடு பிரிப்பின்றி நிற்கும். இவ்வாறு பிரிப்பின்றி நிற்றலை யுணர்த்துதற்கு அத்துவித மென்னும் பிரமப் பொருள் ஒன்றே; இரண்டில்லை என்பதை யுணர்த்துதற்கு ஏகமென்றும் வேதங்கூறினமையால் அவை தம்முள் முரணுமாறில்லை. ஈண்டு உடனாய் நிற்றலாவது, முதல்வன் திருவருள் எங்கும் நிறைந்

திருத்தலால் உயிர்கள் செல்லுமிடமெல்லாந் தான் செல்லாமல் நின்றுங்கு நின்றே ஆங்காங்குள்ள உயிர்களோடு பிரிப்பின்றி நிற்றலாகும். இதனுல். இஃது உடன் ஆகாமையையும் உணர்த்துதல் நோக்கத்தக்கது. மேலே கண்ணொளியின் உயிரறிவு என்றதும், ஈண்டுப் பண்ணும் ஓசையும் என்றதும் உடனுய் நிற்றற்குச் சிறந்த உவமைகளாகும்.

ஒன்ருய் நிற்றல் வேருய் நிற்றல் உடனுய் நிற்றல் ஆகிய மூன்றற்கும் வேறு வேறு உவமை கூறுதல் பல முடிவுகளை யுடையது என்னுங் குற்றமாகும் எனின் அக்குற்றம் வாராமைப் பொருட்டு ஒருமையில் வைத்தே ஆசிரியர் மெய்கண்டார் விளக்கியும் இருக்கின்ருர். அஃது எவ்வாறெனின், அரக்கை உருக்கி உருக்கப்பட்ட அவ்வரக்கிேைடு கற்பொடியைச் சேர்த்தால் அக்கற்பொடியானது அவ்வரக்கிேைடு ஒன்ருய் கூடி நீக்கமின்றி நிற்கும் அதுபோல, முதல்வனும் உயிர்களோடு கூடி நீக்கமின்றி உடனுய்நிற்பான் உருக்கிய அரக்கிேைடு சேர்ந்த கற்பொடி பிரிக்க முடியாமல் ஒன்ருயும் பிரிக்க முடியாதாயினும் கற்பொடியெனத் தோன்றுதலால் வேருயும் அரக்கு முழுதும் கற்பொடி காணப்படுதலால் உடனுயும் நிற்குமாறு போல, முதல்வன் உயிர்களோடு ஒன்ருயும், வேருயும், உடனுயும் அத்துவிதமாய் நிற்றலை இவ்வுவமை யொன்றனுல் விளக்கியிருத்தல் கூர்ந்து நோக்கியின்புறற் பாலதாம்.

முதல்வனும் உயிரும் பேதமே யென்றும் அபேதமே யென்றும் பேதாபேதமே யென்றுங் கூறிப் பிணங்கும் பிறசமயக் கொள்கைகளை மறுத்து. அம்மூவகை நிலையும் முதல்வனுக்கு உண்டு என்பதைப் புலப்படுத்தும் 'அத்துவிதம்' என்ற சொல்லின் உண்மைப் பொருளை ''அவையே தானே யாதல்'' என்ற ஒரு சிறுதொடராலும் எடுத்துக் காட்டுக்களாலும் மெய்கண்ட தேவர் விளக்கியிருக்குந் திறன் அறிந்து போற்றுதற்குரிய தொன்ருகும். இவ்வருமைப்பாடு குறித்தன்ரே ''பொய் கண்டார் காணுப் புனிதமெனும் அத்துவித, மெய்கண்டார்'' என அவர் பாராட்டப் பெறுவாராயினர்.

வழி நூலாசிரியரும் ''பொற்பணிபோல் அபேதப்பிறலதாய் இருள் வெளிபோற் பேதமும், சொற்பொருள் போற் பேதா பேதமுமின்றிப் பெருநூல் சொன்ன அறத்திஞல் விளைவதாய், உடலுயிர் கண்ணருக்கன் அறிவொளிபோற் பிரிவரும் அத்துவிதமாகும் சிறப்பினதாய், வேதாந்தத் தெளிவாம் சைவ சித்தாந்தம்'' என்று மேற்கூறிய கருத்துக்களை வலியுறுத்தியிருத்தல் அறிந்து கடைப்பிடித்தற்குரியதாகும்''.

மெய்கண்ட தேவர் திருவடி வாழ்க!



உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

[இவ்வுவமைகள் திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம் ஸ்ரீ நமச்சிவாய மூர்த்திகளால் உபதேசிக்கப் பெற்று வழி வழி வந்து ஸ்ரீ மாதவச் சிவஞான சுவாமிகளுக்குக் கிடைத்து நாம் உய்யுமாறு சிவஞான சித்தியார் உரைப்பாயிரத்திலே குரு வணக்க மாகச் செய்தருளிய பாடலுக்கு தூத்துக்குடி சித்தாந்தப் பேராசிரியர் திரு. பொ. முத்தையாபிள்ளையவர்கள் உரைகள் செய்து 1926ல் வெளியிட்டுள்ள சிவஞானசித்தியார் பொழிப்புரை நூலில் இருந்து வெளியிடப்பெற்றது. சைவ உலகம் இவருக்கு நன்றி செலுத்துகிறது]

உரையாசிரியராகிய மாதவச்சிவஞானயோகிகளருளிச் செய்த
சிவஞானசித்தியார்

# உரைப்பாயிரம்

குரு வணக்கம்

பண்ணிசைவெம் பரிதிமதி திலதயிலந்
தீயிரும்பு பாணி யுப்பு
விண்ணநில முடலுயிர்நீர் நிழலுச்சிப்
பளிங்குபகல் விளக்குப் பானீர்
கண்ணிரவி யுணர்வொளிபோற் பிரிவரிய
வத்துவிதக் கலவி காட்டித்
தண்ணளிவைத் தெனையாண்ட துறைசைநமச்
சிவாயகுரு சரணம் போற்றி.



[பொழிப்புரை] பண்ணும் (இராகமும்) ஓசையும் போலவும், சூரிய னொளியும் பகற்காலத்துக் காணப்படுஞ் சந்திர னொளியும் போலவும், எள்ளும் அதனுள்ளிருக்கும் நெய்யும் போலவும், தீயும் அதனால் காய்ச்சப்பட்ட இரும்பும் போலவும், தண்ணீரும் அதனோடு சேர்ந்த உப்புப் போலவும். ஆகாயமும் காற்றும் போலவும், உடலும் உயிரும் போலவும், ★ நீரும் அதனிழலும் போலவும், மத்தியான வேளையிலுள்ள சூரியனொளியும் பளிங்கின் ஒளியும் போலவும், பாலும் அதனுடன் சேர்ந்த நீரும் போலவும், கண்ணொளியும் அதற்குப் பொருளைக் காட்டியும் கண்டும் உடனாய் நிற்கும் சூரியனொளியும் போலவும், ஆன்மாவின் அறிவும் அவ்வறிவாற் பொருளையறியும் கண்ணொளியும் போலவும் பிரிக்க முடியாத சிவ சீவர்களின் அத்துவிதமாகிய கலப்பைக் கிருபையினால் அநுபவமாய் அறியும்படி செய்து அடியேனை ஆட்கொண்டருளிய திருவாவடு துறையின் கண் எழுந்தருளியிருக்கும் நமச்சிவாய தேசிக குரு மூர்த்திகளின் திருவடிகளைத் துதிப்பாம் என்றவாறு.

சிவனும் சீவனும் பொருட்டன்மையில் இரண்டாயினும் பிரிக்க முடியாவாம். இவ்வாறு பிரிக்க முடியாத கலப்பின் சம்பந்தத்தையே அத்துவிதமென நூல்கள் கூறும். இவ் வத்துவித சம்பந்தம் எதுபோலு மென்பதறிவித்தற்குப் பதின்மூன்று உவமை கூறினர். அப்பதின் மூன்றுவமைகட்கும் பதின்மூன்று பேதங்களுளவாகலின் மிகைபடக் கூறலென்னுங் குற்றமின்றாம். அப்பேதங்கள் வருமாறு:—

அத்துவிதமாகிய கலப்பை ஒன்றாய் நிற்றலென்பேமா? வேறாய் நிற்றலென்பேமா? ஒருவாற்றால் ஒன்றும் ஒருவாற்றால் வேறுமான உடனாய் நிற்றலென்பேமா? எனின், இம்மூன்றுமாய் நிற்றலே அத்துவிதமாமென்க. மூன்றுமாய் நிற்றற்குப் பயன் யாதெனின், உயிர்கள் நிலைத்தற்கு இறைவன் ஒன்றாய் நிற்றலும், பொருள்களை உயிர்கள்

---

★ நீருக்கு நிழலுண்டென்பது சிவஞானபோதம் எட்டாஞ் சூத்திரம், இரண்டாம் அதிகரணத்தில் ''நீர் நிழல் போல் இல்லா அருவாகி நின்றானை'' என்ற வெண்பாவானும் உரையானும் அறிக.

அறியும்படி அறிவித்தற்கு இறைவன் வேருய் நிற்றலும், அறியினும் அறிந்தவாறே அனுபவிக்கும் சுதந்திரமின்மையின் அனுபவிக்கும்வண்ணம் செலுத்துதற்கு இறைவன் உடனுய் நிற்றலும் வேண்டப்படுதலின் நிலேத்தல், அறிதல், அநுபவித்தல் என்னும் மூன்றும் பயனும். இம் மூன்றனுள் எப்பயனும் அடங்கும். இவ்வாறு நிற்கும் முத்திறத்துள் ஒன்ருய் நிற்றற்கு மூன்று வமையும், வேருய் நிற்றற்கும் மூன்று வமையும், உடனுய் நிற்றற்கு ஏழுவமையும் முறையே கூறினர். அவற்றுள்,

பண் என்பது ஒலியின் பேதம். ஒலியைவிடப் பண் வேறன்று. ஆயினும், ஒலி எல்லாம் பண்ணுகாமையின் ஒலியுமன்று. இவ்வாறு ஒலியுமன்ருய் ஒலியின் பேதமேயாகிய பண் ஒலியை விட்டுத் தனித்து நில்லாதவாறு போலச் சித்தின் பேதமாகிய சீ வ ன், சிவனுகிய சித்தன்ருய் சிவனேயின்றித் த னி த் து நில்லாமையை உணர்த்த "பண் இசை" என்ருர். இதனேயே "யானெனுந்தன்மை நினேயின்றி இல்லாத் தன்மையால் வேறலேன்" எனத்தாயுமான சுவாமிகள் அருளிச் செய்வாராயினர்.

ஒலியின் பேதமே பண்ணென்ருற் போலச் சிவபேதமே சீவனென்னலாமோ என்பார்க்கு, சூரியன் ஒளியையின்றிச் சந்திரனுக்கு ஒளியில்லேயாயினும், பொருளால் வேறு காணப்படுமாறு போல, சிவனேயின்றிச் சீவன் தனித்து நிற்கவில்லேயாயினும் பொருளால் வேறுண்டென்பதுணர்த்த "வெம்பரிதிமதி" என்ருர்.

சூரியனும் சந்திரனும் வேறு வேறு பிரித்தரியப்படுமாறு போலச் சிவனும் சீவனும் வேறு வேறு பிரித்தறியப்படுமோ என்பார்க்கு, நெய்யை விட்டு வேறு பிரித்தறிய முடியாத எள்ளுப்போல, சிவனே விட்டுச் சீவனே வேறு பிரித்தறிய முடியாதென்பதுணர்த்துதற்கு 'திலதயிலம்' என்ருர். எள்ளினின்றும் நெய் வேறு பிரிக்கவும் படுகின்றதே எனின், நெய் உள்ளளவுந்தான் எள்ளெனப் படுவதேயன்றி நெய் பிரிந்த பின்னர் எள்ளென்பதின்ருதலின் அதன் கண் ஆசங்கையின்மை யறிக. இம்மூன்றுவமைகளும் ஒன்ருய் நிற்றலே விளக்கியவாரும்.

இனி நெய்யை விட்டு எள்ளுத்தனித்து நில்லாதவாறு போலச் சிவனேவிட்டு உயிர் தனித்து நிற்றலில்லேஎனப்பட்டு அவ்வாறு தனித்து நில்வாத பொருளுக்கு அறிவிக்க முடியாதாகுமே என்பார்க்கு, தீயினுற் காய்ச்சப்பட்ட இரும்பு தீயேயாயினும் தீயின்வேருய் இரும்பு நிற்றல்

காணப்படுதல் போல, சிவனின், வேருய்ச்சீவன் நிற்பன் என்பது உணர்த்துதற்கு '' தீ இரும்பு'' என்றார்.

தீயின் வேருய் இரும்பு தனித்துநிற்பினும், இரும்போடியைந்த தீ தனித்துக் காணப்படாதவாறு போல. இறைவன் வேறு காணப்படானே என்பார்க்கு, நீரோடு கூடிய உப்பு நீரேயாயினும், நீரில் நின்றும் உப்புத் தனித்து நிற்கவும் படுமாறு போல. இறைவனும் தனித்து நிற்பனென்ப துணர்த்துதற்கு ''பாணி உப்பு'' என்றார்.

நீரும் உப்பும் ஒரு காலத்துப் பிரித்திருப்பது போல, உயிரும் இறைவனும் ஒரு காலத்துப் பிரிந்திருக்குமோ என்பார்க்குக், காற்று ஆகாயத்தையின்றி எக்காலத்தும பிரிந்திராதவாறுபோல உயிர் எக்காலத்தும் இறைவனை விட்டுப் பிரிந்திராதென்ப துணர்த்துதற்கு ''விண்ணநிலம்'' என்றார். இம்மூன்று உவமைகளும் வேருய் நிற்றலை விளக்கியவாறும்.

காற்றுக்கு ஆகாயம் இடங்கொடுத்தலேயன்றிக் காற்றை அசையும்படி செய்வதில்லை; அதுபோல உயிர்க்கு இறைவன் ஆதாரமாய் நிற்றலேயன்றி உயிரைச் செலுத்துதல் இல்லையோ என்பார்க்கு, உடலிருத்தற்காதாரமாகிய உயிர், உடலை உடனின்று செலுத்துவது போல இறைவனும் உயிருடனின்று செலுத்துவ னென்பதுணர்த்துதற்கு ''உடலுயிர்'' என்றார்.

உடலை உயிர் இயக்கும் முறையில் சாக்கிரத்தில் தூல உடலையும், சொப்பனத்தில் தூல உடலை விட்டுச் சூக்கும உடலையும் சுழுத்தியில் தூல சூக்குமம் இரண்டையும் விட்டுக் காரண உடலையும் இயக்குவது போல, இறைவன் உயிரை இயக்கும் முறையில் கூடியும் பிரிந்தும் நிற்பானே என்பார்க்கு நீரினிடத்து நிழல் எக்காலத்தும் பிரிப்பின்றி விரவி நிற்றல் போல உயிரினிடத்து இறைவன் எக்காலத்தும் பிரிப்பின்றி விரவி நிற்பனென்பதுணர்த்துதற்கு ''நீர்நிழல்'' என்றார்.

நிழலின் உபகாரமின்றியே நீர் எக்காலத்தும் உவர்ப்பு கைப்பு முதலிய ரசங்களைப்பற்றி அதுவதுவாய் நிற்பதுபோல, இறைவன் உபகாரமின்றியே உயிர் எக்காலத்தும் விடயங்களைப்பற்றி அதுவதுவாய் நிற்குமோ என்பார்க்கு சூரியனொளி பக்கத்திலிருக்கும் பொழுது அவ்வொளியைக் கொண்டே பளிங்கினொளி பஞ்ச வன்னங்களைப் பற்றுதலும், சூரியனொளி உச்சியிலிருக்கும் பொழுது பளிங்கினொளி அச்சூரியனொளியோடுகலந்து ஒரு வன்னங்களையும்பற்றுமலும் இருத்தல்போல,

பேத்தகாலத்து இறைவன் மறைந்துநிற்க அவ்விறைவன் துணையைக் கொண்டே உயிர்கள் விடயங்களை அறிதலும். முத்திக்காலத்து இறைவனோடு உயிர் கலந்து ஒரு விடயங்களையும் அறியாதிருத்தலும் கூடுமென்புதுணர்த்துதற்கு ''உச்சிப்பளிங்கு'' என்றார்.

உச்சிக்காலத்து எதிர்ப்பட்ட பளிங்கு தன் ஒளி மழுங்காதவாறு போல, முத்திக்காலத்து உயிர்க்குத் தற்போதங் கெடுதலில்லையோ என்பார்க்கு, பகற்காலத்து விளக்கின் ஒளி சூரியன் ஒளியில் அடங்கி நிற்பதுபோல் முத்திக்காலத்து உயிர் தற்போதங்கெட்டு நிற்குமென்பதுணர்த்துதற்கு ''பகல் விளக்கு'' என்றார்.

பகற்காலத்து விளக்குச் செயலற்றிருத்தல் போல முத்திக்காலத்து உயிர்க்கு இன்பாநுபவம் இல்லையோ என்பார்க்குப் பால் தன் சுவை முழுதும் தன்னோடுகலந்த நீருக்காக்கி நீரைத்தன்னுள் அடங்கி நிற்கச் செய்யுமாறுபோல, இறைவனும் முத்திக்காலத்து தன் இன்பம் முழுதும் உயிர்க்காக்கித் தன்னுள் அடங்கி நிற்கச்செய்வனென்பதுணர்ந்துதற்கு ''பால் நீர்'' என்றார்.

நீர் பாலோடு கூடியவழி பாலின் சுவையாயும். பாலோடு கூடாதவழி தன் சுவையாயும் நிற்குமாறு போல உயிர் இறைவனோடுகூடியவழி இறைவனுக்குரிய இன்பமயமாயும், இறைவனோடு கூடாதவழி தனக்குரிய இன்பமயமாயும் நிற்குமோ என்பார்க்கு, கண் ஒளியுடைப் பொருளாயினும், அக்கண்ணொளி, சூரியன் முதலிய பிற ஒளியின் துணையின்றி எக்காலத்தும் பிரகாசிக்கமாட்டாதவாறு போல, உயிர் அறிவுடைப் பொருளாயினும் இறைவனையின்றி எக்காலத்து மறியமாட்டாதென்பதுணர்த்துதற்கு ''கண்ணிரவி'' என்றார்

கண்ணொளியும் சூரியனொளியும் கலந்து நிற்பினும் கண்ணும் சூரியனும் வேறு வேறு இடத்திருத்தல்போல, உயிரின் அறிவும் இறைவன் அறிவும் கலந்து நிற்பினும் உயிரும் இறைவனும் வேறு வேறு இடத்தில் இருத்தல் கூடுமோ என்பார்க்கு, கண்ணொளியின் உள்ளீடாய் விரவி நிற்கும் உயிரையின்றிக் கண்ணொளி விடயத்தை அறியாதவாறு போல உயிரின் உள்ளீடாய் உயிர்க்குயிராய் நிற்கும் இறைவனையின்றி உயிர் ஒன்றனையும் உணராதாகலின் உயிரும் இறைவனும் வேறுவேறிடத்திலிருப்பதில்லை எனவும், ஒரிடத்தில் கலந்து நிற்கும் எனவும் உணர்த்துதற்கு ''உணர்வொளி'' என்றார்.

இவ் வேழுவமைகளும் உடனாய் நிற்றலை விளக்கியவாறும்.

**உரைப்பாயிரம் முடிந்தது.**

---

ரஹீம் பிரிண்டர்ஸ் ★ மதுரை 11.

## சைவசித்தாந்தம்பற்றி மேனாட்டுஅறிஞர் கூறுவது

"சைவ சித்தாந்தக் கொள்கையானது தமிழரது பேரறிவின் சிறந்த பயன்" — ரெவ. ஜி யூ போப்.

"இக்கொள்கையானது தொன்மை நயம் பல அமையப் பெற்றுள்ளது. சமயக் கருத்தில் மிகப் பழமையான யாவும் தென்னிந்தியா-வில் இச்சமயத்திற்குத்தான் உரித்தானவை. இதுவே தமிழ் மக்களின் பண்டைச் சமயமாகும். ஏனையவெல்லாம் பின்வந்தன வாகவும், பிற சமயத்திற்குரியனவாகவும் காணப்படுகின்றன. அணிபெற அமைந்த சமயமாயும், நம்பிக்கைக்கும், நல்வாழ்க்-கைக்கும் எடுத்துக்காட்டாகவும் இருப்பதில் சைவ சித்தாந்தமே தென்னிந்தியாவில் உள்ள சமயங்களின் யாவற்றிலும் சிறந்த தாகும். இந்தியா முழுவதிலுங்கூட சைவ சித்தாந்தமே இந்தியர் நினைவின் சீர்மைக்கும், உயர்தர வாழ்க்கைக்கும் எல்லையாகும் பெருமை படைத்ததென்று கூறுதல் தவருகாது"

— ரெவ. கௌடி.






Book - Post

உயர்திரு. ____________________